ஸ்ரீ:

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:



நிகமாந்த மஹாதேசிகன் அருளிச் செய்த

ஸ்ரீமத்

# ஸம்ப்ரதாய பரிசுத்தி

வெளியிடுவோர்:

ஸ்ரீ விசிஷ்டாத்வைத பிரசாரணி சபை
(ரெஜிஸ்டர்ட்)

7, நாதமுனித் தெரு, தி. நகர்
சென்னை-17

போன்: 440614

*Prize ]* 1967 *[25 Paise*

# ஸம்ப்ரதாய பரிசுத்தி

ஸ்வாமி ஸ்ரீமந் நிகமாந்த மஹா தேசிகன் அருளிச் செய்த ரஹஸ்யங்களில் ஸம்ப்ரதாய பரிசுத்தி என்பது தனிச் சிறப்புடையது. நம் ஸம்ப்ரதாயம் பரம பவித்ரம் என்பது எந்த எந்த காரணங்களால் என்பதை விளக்கும் பாங்கில் அமைந்தது.

அபூர்வமான சில வாக்யங்களை ஸேவித்தால் நின்றுள்ள பல வகையான கலக்கங்களையும் தவிர்க்க இயலும். ஓரொன்று தானே போதாதோ என்பதை ஒவ்வொரு வாக்யமும் மூதலிக்கும்.

ஸம்ப்ரதாயம் என்பது என்ன என்பதையும், எந்த விஷயத்திலே ஸம்ப்ரதாயத்திற்குப் பெருமை என்பதையும் சாதிக்கின்றார்.

ஒரு சில வாக்யங்கள் இங்கே அளிக்கப்படுகின்றன.

(1) ஸத்ஸம்ப்ரதாய ரஹிதமான சாஸ்த்ரத்தால் அர்த்த நிர்ணயம் துஷ்கரம். ஸுகரம் தானாகிலும் உபயுக்தமாகாது.

(2) ஸர்வலோக ஹிதமான அத்யாத்ம சாஸ்த்ர ஸம்பிரதாயத்திற்கு ப்ரதமப்ரவர்த்தகன் ஸர்வேச்வரன்.

(3) வேதாந்த ஸம்பிரதாயத்திற்கு இந்த யுகாரம்பத்திலே ப்ரம்ஹநந்த்யாதிகளுக்குப் பிறகு நம்மாழ்வார் ப்ரவர்த்தகரானார்.

(4) ஸ்ரீபாஷ்யகாரருடைய சிஷ்ய ஸம்ப்ரதாயங்களில் ஒன்றிலும் அர்த்த விரோதமில்லை—முதலியன.

இந்த ஸ்ரீஸூக்தியை ச்ரத்தையுடன் • ஸேவிக்க வேண்டும் என்று தாமே சாதிக்கின்றார்.

*பிலவங்க*
*கார்த்திகை, 9*
*25—11—67.*

அனந்த தன்யவாதங்கள்
ஸேவா, ஸ்ரீநிவாஸராகவதாஸன்

ஸ்ரீ:

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:



நிகமாந்த மஹாதேசிகன் அருளிச் செய்த

## ஸ்ரீமத்

# ஸம்ப்ரதாய பரிசுத்தி

ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய: கவிதார்கிககேஸரீ
வேதாந்தாசார்ய வர்யோமே ஸந்நிதத்தாம் ஸதா ஹ்ருதி

ராமாநுஜதயாபாத்ரம் ஜ்ஞானவைராக்யபூஷணம்
ஸ்ரீமத்வேங்கடநாதார்யம் வந்தேவேதாந்ததேசிகம்

சீரொன்று தூப்புல் திருவேங்கடமுடையான்
பாரொன்றச் சொன்ன பழமொழியுள் - ஓரொன்று
தானேயமையாதோ தாரணியில் வாழ்வார்க்கு
வானேறப் போமளவும் வாழ்வு.

---

தம்பரமென்றிரங்கித் தளராமனந்தந்தருளால்
உம்பர் தொழும் திருமாலுகந்தேற்றதுமுபாயமொன்றால்
நம்பிறவித்துயர் மாற்றிய ஞானப் பெருந்தகவோர்
சம்பிரதாயமொன்றிச் சதிர்க்குந்நிலே சார்ந்தனமே.

ஸதாசார்ய ஸம்பிரதாயத்தாலே அத்யாத்ம சாஸ்த்ரார்த்த விசேஷ நிர்ணயம் பண்ணவேணும் என்னுமிடம் உபநிஷத்துக்களிலும் உபப்ரும்ஹணங்களிலும் ப்ரஸித்தம்.

சாஸ்த்ர நிரூபணம் பண்ணுமிடத்தில் சக்தியில்லாதவர்களுக்கு **உபதேசாத்ஹரிம் புத்த்வா** என்கிறபடியே, சாஸ்த்ரக்ஞ ஸம்ப்ரதாயமாத்ரமும் அபேக்ஷிதார்த்த நிர்ணயகமாம்.

ஸத்ஸம்ப்ரதாய ரஹிதமான சாஸ்த்ரத்தால் அர்த்த நிர்ணயம் துஷ்கரம். ஸுகரந்தானுகிலும் உபயுக்தமாகாது.

அத்யந்தாதீந்த்ரிய விஷயத்தில் சாஸ்த்ர மூலமல்லாத ஸம்ப்ரதாயமும், ஸம்ப்ரதிபந்ந சாஸ்த்ர விருத்தமான ஸம்ப்ரதாயமும் ப்ரம விப்ரலம்ப ஸம்ப்பாவனை யுண்டாகையால் பாஹ்யதுல்யமாகையாலே அவிச்வஸநீயம்.

பரஸ்பர விருத்தமாக ஸதஸ்யமும் ரஹஸ்யமுமென்று சொல்லுமவை யிரண்டும் ஸ்வவாக்யத்தாலே பாதிதங்களாம்.

திரளிலே சொல்லுமவைகளில் சில வர்த்தங்களை ஏகாந்தத்தில் சொல்ல

விதிக்கையாலே அவற்றை *ரஹஸ்யங்கள்* என்கிறது.

ப்ரஜாபதிவாக்யம் முற்பட அஸுரேந்த்ர ஞனை விரோசனனை மோஹிப்பிக்கைக்காகச் சொல்லப்பட்டு பிற்பட தேவேந்த்ரனை பர்வ க்ரமத்தாலே பரிசுத்தாத்ம விஷயத்திலே ப்ரதிஷ்ட்டித புத்தியாக்குகிறது.

உபகோஸல வைச்வாநராதி வித்யை களிலே முற்பட வேத்யோபாதேயங்களைப் பற்ற ஏகதேசோபதேசம் க்ரமேண சேஷ பூரணார்த்தம்.

ஸர்வேச்வரன் தானும் தானுபதேசித்த க்ஞானத்தைப் பின்னையும் *தத் வித்த்ஹி ப்ரணிபாதேந பரிப்ரச்நேந ஸேவயா* என்று பல க்ஞானிகள் பக்கலிலே கேட்க விதித்தானிறே!

இப்படிகளால் ஸம்ப்ரதிபந்ந சாஸ்த்ர விரோதமுமன்றிக்கே, சாஸ்த்ரமூல ஸம்ப்ர திபத்தியுண்டான ஸம்ப்ரதாயம் உபஜீவ்யம்.

(அப்படிப்பட்ட) ஸத்ஸம்ப்ரதாயத்தில் தோற்றும் விரோதம் - தத்வ விஷயமாகில் -

தாத்பர்ய பேதத்தாலே விரோத சாந்தியுண்டாம். அனுஷ்ட்டான விஷயமாகில் அவ்வேவா விதிக்கு அனுகுணமாக வ்யவஸ்த்திதாவ்யவஸ்த்திதப்ரக்ரியையாலே விகல்பமாம்.

ந்யாலோபாஸநங்களிலே, அதிகாரி பேதத்தையிட்டு வ்யவஸ்த்தித விகல்பம் என்று பார்க்கிலும் (என்பார்க்கும்) பல ஸாம்யத்தையிட்டு, துல்யவிகல்பம் என்று பார்க்கிலும் (என்பார்க்கும்) விரோதமில்லை.

ஸர்வலோக ஹிதமான அத்யாத்ம சாஸ்த்ர ஸம்ப்ரதாயத்திற்கு ப்ரதமப்ரவர்த்தகன் ஸர்வேச்வரன். மற்றுள்ளாரெல்லாரும் அவன் தானேயாதல், சேதனாந்தர முகத்தாலேயாதல், மயர்வறமதி நலமருள ப்ரவர்த்திப் பிக்கிறவர்கள்.

இப்படி அநஸூயாதி குணயுக்தராய் *ப்ரணிபத்ய அபிவாத்ய ச* இத்யாதிகளின் படியே ஸம்யகுபஸந்நரான அதிகாரிகளைப் பற்ற, யதார்த்ததர்சிகளாய், யதாத்ருஷ்டார்த்தவாதிகளான வ்யாஸ போதாயநாதிகளாலே யதாதிகாரம் ப்ரவ்ருத்தமான

வேதாந்த ஸம்ப்ரதாயத்திற்கு இந்த யுகாரம்பத்திலே ப்ரம்ஹ நந்த்யாதிகளுக்குப்பின்பு நம்மாழ்வார் ப்ரவர்த்தகரானார்.

***ப்ராப்யம் க்ஞாநம் ப்ராம்ஹணாத் க்ஷத்ரியாத்வா வைச்யாத் சூத்ராத் வாபிநீ சாதபீக்ஷணம்.*** இத்யாதி ப்ரமாண பலத்தாலே மிக்க வேதியர் வேதத்தின் உட்பொருள் நிற்கப்பாடி யென்னெஞ்சுள் நிறுத்தினான் என்கிறது உபபந்நம்.

வேதாந்தார்த்த வைசத்ய ஹேதுவாகையாலே பாஷாந்தரமுப ஜீவ்யம். தர்மவ்யாத துலாதாராதி வ்ருத்தாந்தங்களையும் இங்கே அநுஸந்திப்பது.

***சூத்ரயோநௌ அஹம் ஜாதே: நாதோந்யத் வக்தும் உத்ஸஹே*** என்கிறது விஷய பேதத்தாலே பரிஹ்ருதம்.

இப்பரம்பரையாலும் ப்ராதுர்ப்பாவ விசேஷத்தாலும் நாத முநிகளுக்கு ஆழ்வார் ஆசார்யரானார்.

இவரை ப்ரபந்ந ஸந்தாந கூடஸ்த்ததையாலே ஆளவந்தார் ***ஆத்யஸ்ய ந:*** ***குலபதே:*** என்று அருளிச்செய்தார்.

நாதமுனிகள் தம்முடைய திருப்பேரனா ரான ஆளவந்தாருக்குத்தாம் உபதேசியாதே தம்முடைய சிஷ்ய ப்ர சிஷ்யர்களை, "இவ ருக்கு ஆகாங்க்ஷை பிறந்த போது உபதே சியுங் கொள்" என்று ஆக்ஞாபித்தது குரு புத்ரபௌத்ராதிகளும் வித்யாப்ரதாநத்திற்கு ப்ரசஸ்த பாத்ரங்களென்றும், க்ஞாந ஸந்த தியாலே முற்பட்டவர்களும் குருக்களாக ஆதரணீயரென்றும், ஆகாங்க்ஷையன் றிக்கே யிருக்கச் செய்தே சொன்னால் சிஷ்ய புத்தியில் அர்த்தம் ப்ரதிஷ்ட்டித மாகாதென் றும், தெளிவித்தபடி.

மணக்கால் நம்பி ஆளவந்தாருக்கு நெடுநாள் பச்சையிட்டு, ஒரு விரகாலே ஆகாங்க்ஷை உண்டாக்கி உபதேசித்தது- ஆசார்ய குலத்திற்குத் தாமொரு கிஞ்சித் காரம் பண்ணுகையிலும் பரமாசார்ய நியோ கத்தைக் கடுகத் தலைக்கட்டுகையிலு முண் டான த்வரையாலும், சிரகால பரீக்ஷாதிகள் வேண்டாதபடி ***போதநஞ்ச முஹு: க்ர மாத்*** என்கிற யுகதர்மாநுஸாரத்தாலும் உப பன்னம்.

ஆளவந்தார் தாம் நாதமுனிகளை முன் னிட்டு ஸ்தோத்ரம் பண்ணித்தும், சரணம்

புக்கதுவும், தம்முடைய ஆசார்யருக்கு இது ப்ரியதம மென்றும், தமக்கு ஆசார்யவத்தை முதலான ஸம்பத்துக்களுக்கும் நாதமுனி வம்சத்தில் பிறவியென்றும் தோற்றுகைக்காகவும், ஆசார்யர் விஷயத்திற் போலே பரமாசார்ய விஷயத்திலும் க்ருதக்ஞதாதிகள் வேணுமென்கைக்காகவும் என்றறியப் படும்:

ஆசார்ய பக்தியில் சிலரை க்ரந்தங்களிலே வ்யப தேசித்தவர்களையும் மற்றுள்ளவர்களையும் அனுஸந்திப்பார்கள்.

ஆளவந்தாருடைய நியோகத்தாலே, ஸ்ரீபாஷ்யகாரரை அங்கீகரித்த பூர்ணரான பெரிய நப்பி இவரைத் தமக்கு ஸப்ரம்ஹசாரிகளான திருக்கோட்டியூர் நம்பி பக்கலிலே அர்த்த சிக்ஷை பண்ணவும், திருமலையாண்டான் பக்கலிலே-திருவாய் மொழி கேட்கவும், ஆழ்வார் திருவரங்கப் பெருமாளரையர் பக்கலிலே நல்வார்த்தை கேழ்க்கவும், நியோகித்ததும், **பஹுப்ய: ச்ரோதவ்யம் பஹுதா ச்ரோதவ்யம், க்ஞாநவ்ருத்தா மயா ராஜந் பஹவ: பர்யுபாஸிதா:** இத்யாதிகளையும் (சுகாதி வ்ருத்தாந்தங்களையும், பார்த்து சிஷ்ய பூதரை

பஹுமுகமாகத் திருத்த வேண்டும் என்கிற அபிஸந்தியாலே உபபந்நதமம்.

இப்படி ஆசார்யாபிமத விஷயத்தில் ஆசார்யாநுக்ஞையாலே, அபேக்ஷித க்ரு நோப ஜீவனம் பண்ணுமது சாஸ்த்ரார்த்த மென்னுமிடம் அந்திம தசாவதியாக அத்யந் தாவஹிதராய்க் கொண்டு ஸ்தாசார்யானு பாலனம் பண்ணின ஸ்ரீபாஷ்ய காரருடைய அனுஷ்ட்டானத்தாலே ஸித்தம்.

அத்யாத்ம விஷயத்தில் ப்ரதாநாப்ரதா நாம்சங்களை ஒருவர்க்குப் பலராக உபதே சிக்க, வேதாந்தங்களில் பல விடங்களிலே கண்டோம்.

ஓராசார்யர் பக்கலிலே க்ருத்ஸ்நோப தேசம் மைத்ரேயாதிகளுக்குப் போலே சில ருக்குண்டாம். ப்ரதான ச்ருதத்தினுடைய ப்ரதிஷ்ட்டார்த்தமாக பலருபதேசித்தால் *அல்பம் வா பஹுவா யஸ்ய ச்ருதஸ் யோப கரோதிய: தமபீஹ குரும் வித் யாத் ச்ருதோபக்ரியயா தயா* என்கை யாலே அவர்கள் பக்கலிலும் ஆசார்யப்ரதி பத்தி பண்ணப்ராப்தம்.

அவ்யவஹித மோக்ஷோபாய வ்யவஸா யம் பிறப்பிக்கை ப்ரதாநாசார்யக்ருத்யம்.

இது கலங்காதபடி பண்ணுகையும், பரி கர பூர்த்தி யுண்டாக்குகையும் ஆசார்யாபி மத சிக்ஷகாந்தர க்ருத்யம்.

ஆசார்ய ஸம்பந்தத்தை யுண்டாக்கின வர்களையும் ப்ரபந்த முகங்களாலே பரம் பரையாக உபகரித்தவர்களும் ஆதரணீயர்.

இவர்களில் ப்ரதானதமன் ச்ரிய: பதி. இவன் ஒருவனுமே தனக்கொரு ஆசார் யனில்லாத பரமாசார்யன்.

ஸ்ரீபாஷ்யகாரருடைய சிஷ்ய ஸம்ப்ரதா யங்களில் ஒன்றிலும் அர்த்த விரோதமில்லை. வாக்ய யோஜநா பேதமே யுள்ளது.

தேச காலாவஸ்த்தா விசேஷங்களாலே வரும் அனுஷ்ட்டான வைஷம்யம் சாஸ்த் ராநுமதம்.

சோராபராதத்தை மாண்டவ்யன் பக்கல் ஆரோபித்தாற்போலே ஸ்வேச்சைக்கனு குணமாக அநிபுணர் சொல்லுமது வக்தாக் களுக்கே தோஷமாம்.

திருமந்த்ரத்தில் பதார்த்த வாக்யார்த்தங்கள் எல்லாம் மூலபூத நிருக்தாதி வாக்ய விசேஷங்களாலே வந்தவை.

இதில் பதத்ரயத்திலுமாக வாதல், ப்ரதம பதத்திலேயாதல்,ப்ரதமா க்ஷரத்திலேயாதல், ஸங்க்ஷேப விஸ்தர க்ரமத்தாலே சப்தார்த்த ஸ்வபாவங்களைக் கொண்டும் அர்த்த பஞ்சகாநுஸந்தானம் பண்ணுமதுவும், அன்யோன்ய விருத்தமன்று.

இப்படி ப்ரதம த்விதீயாக்ஷரங்களாலே, ஆர்த்தமாக வாதல், சாப்தமாக வாதல், சரண்ய ஸஹ தர்ம சாரிணீ ப்ரதிபாதனம் பண்ணுமதுவும் அவ்வோ வாக்ய விசேஷ மூலம்.

மத்யமாக்ஷரம் பத்நீபரம் என்றும் நிர்வாஹத்தில் விசேஷாபாதந பலத்தாலே அவதாரணம் அர்த்த ஸித்தம்.

இந்த அவதாரணத்தாலே, ஆத்ம சரீர பாவம் ஸித்திக்கிறதென்பார்க்கு சேஷத்வாயோக வ்யவச் சேதத்திலே தாத்பர்யங் கொள்ளலாம்.

*மகாரேரார்த்த ஜீவ* இத் யாதிகளிற் படியே, த்ருதீயாக்ஷரம் ஜீவ ஸஜாதீய ஸர்வபரம் என்பார்க்கும் இதில் ஸ்வாநு ஸந்தா நமார்த்த மென்ன வேணும்.

*அகாரரார்த்தாயைவ ஸ்வம்ஹம்* என்று விசேஷித்து வ்யாக்யானம் பண்ணி னவர்களுக்கு இவ்வநு ஸந்தானம் ஸர்வ ஜீவ ஸாதாரணுகார விஷயம்.

பகவச் சேஷத்வம் தோற்றுமிடமெல் லாம் பாகவத சேஷத்வ பர்யந்தமாக அநு ஸந்திக்க ப்ராப்த மாயிருக்க, ஔசித்யாதி சயத்தாலே மத்யமபதத்திலே, இத்தை அநு ஸந்திக்குமது உபபந்நம்.

ப்ரதம த்விதீய சதுர்த்திகளுக்கு ஏகார்த் தத்வ பிந்நார்த்தத்வங்களும் ப்ரமாணுநு குண வாக்யார்த்த விவக்ஷா பேதத்தாலே சொன்னவை.

த்வயத்தில் பூர்வாபர ஸ்ரீமச் சப்தங்களி லும், பூர்வாபர நாராயண சப்தங்களிலும் சில வாகார விசேஷங்களைப் பிரித்து அநு ஸந்திக்குமது உபாய பல தசைகளுக்கு உப யுக்த தமாம்ச நிஷ்கர்ஷம் பண்ணினபடி. சரணங்களை உபாயம் என்கிறத்துக்கு சரண விசிஷ்டவசீ கார்யன் பக்கலிலே, தாத்பர்ய

மாகையாலே, ஸித்தோபாய பேதமும், ஸாத்யோபாய பாதமும் வாராது.

நமஸ்ஸு நாநார்த்தமாக நிருக்தமாகையாலே; ப்ரதம த்விதீய ரஹஸ்யங்களில் மத்யம சரமபதங்களுக்கு வாக்யார்த்தானுகுணமாக அர்த்த பேதங்கொள்ளலாம். த்விதீய ரஹஸ்யங்களில் கிடக்கிற சரண சப்தம் உபாயபரமானதடியாக வசீகரணோ பாயத்துக்கு சிலர் பண்ணும் திரஸ்காரமெல்லாம் ஸித்தோபாய ப்ராதாந்யபரம், ஸ்வாநு ஸந்தாந பரமாயும், விதிபரமாயும், நிற்கிற ஆக்யாதங்களில் ஆவ்ருத்திக்கு க்ஞாபகமில்லாமையாலும், அநாவ்ருத்திக்கு கண்டோக்தி யுண்டாகையாலும் வர்த்தமாந வ்யபதேசம் அனுஷ்ட்டான காலாபிப்ராயம்.

ப்ரபத்திக்கு யாவஜ் ஜீவாநுவ்ருத்தி சொல்லுவார்க்கும் ***த்வயம் அர்த்தாநுஸந்தாநேந ஸஹ ஸதைவம் வக்தா*** இத்யாதிகளிற் சொன்ன ஸுகாஸிகையிலே தாத்பர்யங் கொள்ளலாம்.

***ந்யாஸ: பஞ்சாங்க ஸம்யுத:*** என்று சொன்ன ப்ரபத்யங்கங்களிலே, சிலர் கதிபயாநாதரம் பண்ணுமது அங்கியினுடைய வைபவார்த்தம்.

விசேஷித்து கதிபயோபதாநம் பண்ணு மதுவும் அங்காந்தரங்களிற் காட்டில், இவ் வங்கங்களுடைய ப்ரசம்ஸார்த்தம்.

சரம ச்லோகத்தில் விதிக்கிற ப்ரபத்தி ஸகலபல ஸாதனமாகையாலே அங்கமாக வும், ஸ்வதந்த்ரமாகவும் வ்யாக்யானம் பண் ணின பாஷ்யா (கத்யா)திகளுக்கு விரோத மில்லை.

ஸர்வதர்ம சப்தத்தில் ஸங்குசிதாஸங்கு சித வ்ருத்திகளைக் கொள்ளுமவர்களுக்கு பரபக்ஷத்திற் போலே ஸ்வதர்ம ஸ்வரூபத் யாக விதி விவக்ஷை யில்லாமையாலே ஸ்வ தந்த்ராக்ஞானுபாலந விரோதமில்லை. ''***பரித் யஜ்ய***'' சப்தத்திலும் ஏக சப்தத்திலும் மூல ப்ரமாணா நுகுணமாகச் சொல்லும் பலவர்த் தங்களிலும் பரஸ்பர விரோதமில்லை.

அவற்றில் புனருக்தி வாராதபடி அனு ஸந்திக்குமதே வேண்டுவது.

சரண்யனுக்கு ப்ரபத்தி கர்மத்வத்தை யும் மோக்ஷ கர்த்ருத்வத்தையும் ப்ரதிபாதிக் கிற ***மாம் அஹம்*** என்கிற பதங்களிலே

ஸர்வ ஸ்வீகாரோப யுக்தமான ஸௌலப்ய மும், ஸர்வோபகாரோப யுக்தமான பரத்வ மும், அநுஸந்திக்குமிடத்தில் அபேக்ஷித விசேஷங்களைப் பிரித்ததும் அநுஸந்திக்கு மது சேஷவ்யவச்சேதார்த்தமன்று.

**வ்ரஜ** என்றும், **த்வா** என்றும், அர்ஜு னனை ஒருவனைக் குறித்துச் சொன்னாலும் தாத்பர்ய விசேஷத்தாலே இது ப்ரபத்யதி காரிகள் எல்லார்க்கும் வரும்.

ஸர்வபாப மோக்ஷவசனத்தில் புத்திபூர் வோத்தராகத்தையும் கூட்டுவார்க்கு சரண் யாபிப்ராய மூலபுன: ப்ரபதநாதி முகத்தாலே அவைகளுக்கு விநாசம் விவக்ஷிதமாகை யால் சாஸ்த்ர விரோதமில்லை.

**மோக்ஷயிஷ்யாமி** என்கிற ஸங்கல் பத்தின் பலத்தை **ப்ராரப்த கர்மாவ ஸான (கால)த்திலே** என்றவர்களுக்கும் ப்ரபத்தி பண்ணினவன் **கோலின காலத் திலே** என்றவர்களுக்கும் ஆர்த்தியில் தாரதம்யத்திற் கீடாக பலாநுபவத்தாலே யாதல், ப்ரபத்தி வைபவத்தாலே யாதல், ப்ராரப்தகர்மா வஸான(கால)த்திலே மோக்ஷமும் துல்யம்.

அர்ஜுனனுக்கு சோக நிமித்தம் வேறேயாகிலும் *மாசுச: ஸம்பதம் தைவீம்* என்கிற விடத்திற் போலே *மோக்ஷயிஷ்யாமி மாசுச:* என்றத்திலும் ப்ரகரணாநுகுண நிமித்த விசேஷா நுஸந்தாநமுசிதம்.

மற்றும் இப்படி வேதாந்த ஸித்தாந்தங்களான தத்வஹித புருஷார்த்தங்களில் பரஸ்பர விரோதமும் பூர்வாபர விரோதமும் இல்லாத சுத்த ஸம்ப்ரதாயக் க்ரமத்தை ஸங்க்ரஹித்தனம்.

*ஸூவ்யாஹ்ருதாநி மஹதாம்* இத்யாதிகளையும் இங்கே ஸங்க்ரஹித்துக் கொள்வது.

கடலமுதத்தைக் கடைந்து சேர்த்த—
திருமாலடி காட்டியநம்
தேசிகர் தந்நிலை பற்றிச் சேர்ந்தோமே. (அ. ர. 2.)

ஆஸர்வக்ஞாதஸ்மத் ஆசார்யபங்க்தே:
அப்ரத்யூஹம் ஸத்பதம் ஸ்த்தாபயந்தீ,
ஸைஷா நித்யம் ஸம்ப்ரதாயஸ்ய சுத்தி:
ச்ரத்தாதவ்யா சாதக ந்யாய நிஷ்டை:

கவிதார்கிகஸிம்ஹாய கல்யாண குணசாலிநே,
ஸ்ரீமதே வேங்கடேசாய வேதாந்த குரவே நம:

———

தி இந்தியா பிரிண்டிங் ஒர்க்ஸ், மயிலாப்பூர், சென்னை—4